ஸ்ரீமத் ஞான சிவாசார்யர்

அருளிய

# சிவபூஜா ஸ்தவம்

பொழிப்புரை

முனைவர் ஸ்ரீ. தி. கணேசன்

வெளியீடு

**S. ஸுந்தரேச சிவம்**

விடயபுரம்.

## நூல் விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| பெயர் | : | சிவபூஜா ஸ்தவம் |
| ஆசிரியர் | : | ஸ்ரீமத் ஞான சிவாசார்யர் |
| பொருள் | : | சைவபூஜை முறையும் விளக்கமும் |
| பொழிப்புரை | : | முனைவர் தி. கணேசன் |
| மொழி | : | ஸம்ஸ்க்ருதம், தமிழ் |
| எழுத்து | : | க்ரந்தம், தமிழ் |
| வெளியீடு | : | சிவஸ்ரீ S. ஸுந்தரேச சிவம் |
| நாள் | : | 29-12-2007 |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ துர்கா ஆய்வு நிறுவனம்<br>நயினாரகரம் - 627 804,<br>தென்காசி தாலுகா.<br>✆ 04633-267214<br>மின்னஞ்சல் : pskmtrust@yahoo.co.in<br>வலைதளம் : www.pskmtrust.org |

ஶிவஜய ழ

ஸ்ரீகுருப்யோ நம:

# ஆசியுரை

ஸாஹித்ய சிரோமணி சிவாகம ஞானபானு
சிவஸ்ரீ.பால. ஸர்வேச்வர சிவாசார்யர் M.A. M.Phil,
முதல்வர், ஸ்ரீமத் ஸ்ரீகண்ட சிவாசார்ய வேத சிவாகம வித்யாபீடம்
காரைக்கால்.

சைவ ஸமயத்தில் பிறந்த ஒவ்வொருவரும் ஶிவதீக்ஷை பெற்று ஆத்மார்த்த ஶிவபூஜையைச் செய்ய வேண்டும் என்பது நம் ஸமயக்கொள்கை.

*அவஶ்ய கார்யம் ஶைவாநாழ ஆத்மார்த்த ஶிவபூஜநழ॥*

சைவர்களால் அவச்யம் செய்யத் தக்க செயல் ஆத்மார்த்த ஶிவபூஜை என்பது ஸ்ரீமத்.அப்பய்ய தீக்ஷிதர் வாக்கு.

அந்த ஆத்மார்த்த ஶிவபூஜையினையும், அதன் விளக்கங்களையும், நுணுக்கங்களையும் தொகுத்து வழங்குவதே ஸ்ரீமத் ஞானசம்பு ஆசார்யரால் இயற்றப்பெற்ற ஶிவபூஜாஸ்தவம் என்ற இந்நூல் ஆகும். சைவர்கள் அனைவரும் படித்து அறிய வேண்டிய அவச்யம் வாய்ந்த இந்நூல் க்ரந்த லிபியில் பொழிப்புரையுடன் வெளிவருவது சிறப்பாகும்.

நமது மாணவன் சிர.ஸுந்தரேச சிவத்தின் முயற்சியில் அவரது பெற்றோர் விடையபுரம் சிவஸ்ரீ. S. ஸ்வாமிநாத சிவாசார்யர், ஸ்ரீமதீ. வேம்பு அம்மாள் தம்பதியினரின் ஷஷ்ட்யப்த பூர்த்தி விழாவில் இந்நூல் வெளியிடுவது மிகுந்த மகிழ்ச்சியைத் தருகிறது..

விழா இனிது நிறைவேறவும், இதுபோன்று இன்னும் பல நூல்கள் வெளிவரவும் எல்லாம் வல்ல பரமேச்வரனை ப்ரார்த்திக்கிறேன்.

அன்புடன்
சிவஸ்ரீ.பால.ஸர்வேச்வர ஶிவாசார்யர்
காரைக்கால்

18-12-2007

எனவே இந்நூலின் பொருளடக்கம் போன்று முதல் ஸ்லோகம் அமைந்துள்ளதாக கூறலாம்.

இரண்டு முதல் ஆறு வரையிலான ஐந்து ஸ்லோகங்களில் ஸைவ ஸாஸ்த்ராவதந ரஹஸ்யப் பொருளும், நான்கு கால ஸாஸ்த்ராவதநமும் கூறப்படுகிறது.

ஏழு முதல் பதிமூன்று வரையிலான ஏழு ஸ்லோகங்களில் வஞ்ஸாக்ஷிகளும் அதன் தக்ஷங்களும், விளக்கமாகவும், குறிப்பாகவும் உணர்த்தப்படுகின்றன. பதினான்கு, பதினைந்து, பதினாறு ஆகிய மூன்று ஸ்லோகங்களில் ஸிவ கூஸந வஜா விளக்கப்பட்டுள்ளது. பதினேழாவது ஸ்லோகத்தில் ஸிவாஸநு மற்றும் ஐதிக்யின் வ்யாப்தியை கணக்கிட்டுக் கூறுகிறார் ஸ்ரீஜ ஜ்ஞாந ஸம்ஹாசாயக்ஃ॥

பதினெட்டு முதல் இருபத்துஐந்து வரையிலான எட்டு ஸ்லோகங்கள் ஸிவனது ஐதிக் யந்ரஃ விஜ்ரஹஃ ஆகியவற்றை நயம்பட உரைப்பதாக அமைந்துள்ளன.

இருபத்தாறு முதல் முப்பது வரையிலான ஐந்து ஸ்லோகங்கள் ஸம்ஸாநாதி க்ஷத்ரம்ஸக கூராநாஸங்களை மறைமுகப் பொருளாய் குறிப்பதாக அமைந்துள்ளன.

முப்பத்தைந்து முதல் முப்பத்தி ஒன்பது வரையிலான ஐந்து ஸ்லோகங்கள், கூவாஹநு முதலான பத்து ஸம்ஸ்காரங்கள், ஹரஜயாதிநாஸங்கள் மற்றும் அவற்றின் தக்ஷங்கள் ஆகியவற்றை விளக்குகின்றன.

நாற்பது, நாற்பத்தி ஒன்று, நாற்பத்தி இரண்டு ஆகிய மூன்று ஸ்லோகங்கள், சுஹிஜெகு முதலிய உவசாரங்கள், மூயாஜ்ஃ ஹொமாஜவஜெகள் மற்றும் தக்ஷங்கள் ஆகியவற்றை விளக்குகின்றது.

நிறைவாக நாற்பத்திமூன்று, நாற்பத்தி நான்கு, நாற்பத்தி ஐந்து ஆகிய ஸ்லோகங்கள் முறையே நிதஸ் வவித்ரு சாற்றுதல்,

# முன்னுரை

பூஜை அல்லது வழிபாடு என்பது பல வகைப்பட்டது; அது இறைவனிடம் ஆன்மா கொண்டுள்ள உயர்ந்த அன்பை வெளிப்படுத்துவதற்கான ஒரு இன்றியமையாத சாதனமாகப் பல சமயங்களிலும் கொள்ளப்பட்டுள்ளது. சிரௌத யாகங்களான ஈசானபலி முதலியவற்றிலும், ஸ்ம்ருதிகள் விதித்த நித்தியகருமங்களிலும், போதாயனஸ்மிருதி பரிசிஷ்டத்தில் காணப்படும் மஹாதேவ அஹரஹ:பரிசரியாவிதி ஆகியவற்றிலும் உபாஸனை செய்யும் ஈசுவரனுக்குப் பூஜை செய்வது ஒரு முக்கிய அங்கமாகக் காணப்படுகிறது. புராணங்களிலும் மற்றும் பல நூல்களிலும் கூறப்பட்ட விரதங்களுக்கங்கமாக அந்தந்த தேவதைகளைக் கலசம் மற்றும் உலோகவிக்கிரஹங்களிலும் ஆவாஹனம் ஆகியன செய்து பலவித உபசாரங்களைச் செய்து பிரார்த்திப்பதும் வழக்கு.

சைவசித்தாந்தத்தில் பூஜை என்பது பல தனிக் கொள்கைகளையுடையது; அதனுடைய பெருமைகளும் பயன்களும் பல; அது முக்திக்குச் சாதனமாகவும் திகழ்கிறது. சைவயோகத்திற்கங்கமான தியானம், பாவனை ஆகியன பூஜையில் முக்கிய அங்கமாகத் திகழ்கின்றன. பொதுவாக பூஜை இருவகைப்படும்: மனத்திலேயே இறைவனைப் பாவித்து எல்லா உபசாரஙகளையும் செய்தல் (மானஸம்); சாத்திரங்களில் கூறப்பட்டவாறு வெளியில் கலசம், சந்தணம், பூ, உலோகம், மண்டலம், சக்கரம், உயர்ந்த இரத்தினம் ஆகியவற்றில் மந்திரங்களால் பெருமானை ஆவாஹனம் முதலியவற்றைச் செய்து அவரவர் சக்திக்கேற்ப அபிஷேகம், புஷ்பம் ஆகியன கொண்டு இயற்றுவது (பாஹ்ய பூஜை).

சிவபூஜாஸ்தவம் என்னும் இச்சிறிய நூலில் அதன் ஆசிரியரான ஞானசம்பு சிவாசாரியார் சைவ சித்தாந்த ஆகமங்களில் விளக்கப்பட்டுள்ளவாறு நிருவாணதீக்ஷை, ஆசாரியாபிஷேகம் முதலிய உயர்ந்த தீக்ஷைகளைப் பெற்றுக்கொண்ட ஆசாரியரானவர் நீட்டிய கருமத்தின் அங்கமாகச்

பத்ததிநூலையே சுருக்கி இந்தப் பூஜாஸ்தவத்தை இயற்றியுள்ளார் எனவும் நாம் அறிகிறோம். இந்த ஞானரத்னாவளி இன்னும் அச்சாகவில்லை; கையெழுத்துப்பிரதிகள் சில பாண்டிச்சேரியிலுள்ள French Institute ஆராய்ச்சி நிறுவனத்திலும், சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலும் (Government Oriental Manuscripts Library), மைசூரிலுள்ள கீழ்த்திசைச் சுவடிகள் ஆராய்ச்சி நிலையத்திலும் (Mysore Oriental Institute) காணப்படுகின்றன.

இந்த பூஜாஸ்தவம் உரையுடன் சேர்த்து தேவகோட்டை சிவாகமபரிபாலன சங்கத்தினால் 1935ஆம் வருடம் அச்சாகியுள்ளது. அதற்குப் பிறகு இந்நூல் மறுபதிப்போ மறுஅச்சோ ஆனதாகத் தெரியவில்லை. தற்சமயம் மூலம் மட்டும் தமிழாக்கத்துடன் வெளியாகிறது. சில ஓலைச்சுவடிகள் மற்றும் கையெழுத்துப் பிரதிகள் ஆகியவற்றின் துணைக்கொண்டு சிவபூஜாஸ்தவ மூலத்தை அதன் உரையுடன் பாடபேதங்களுடன் சேர்த்துப் பதிப்பிக்கத் திட்டமிட்டு அவ்வேலையைச் செய்துவறுகிறேன். சிவபெருமானின் அருள் துணையின் மூலம் அச்சிவத்தொண்டு விரைவில் பூர்த்தியாகும் என எண்ணுகிறேன்.

இந்நூலைத் தமிழாக்கம் செய்யுமாறு என்னைத் தூண்டி ஊக்கமளித்து உதவிய சிவஸ்ரீ.ராஜேஷ் அவர்களுக்கும், சிவஸ்ரீ. கார்த்திகேயசிவம் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். என் சிற்றறிவுக்கெட்டியவரை உரைநூலின் துணையுடன் இத்தமிழாக்கத்தைச் செய்துள்ளேன்; அதிலுள்ள பிழைகளை பொறுத்தருளி நிறையிருப்பின் என்னை மேலும் ஊக்குவிக்குமாறு கற்றோர்களை வேண்டுகிறேன்.

சிவஞானத்தொண்டன்,

T. கணேசன்

சைவசித்தாந்த ஆராய்ச்சியாளர்,

French Institute,

பாண்டிச்சேரி

# சிவபூஜா ஸ்தவம்

காலை எழுந்தவுடன் சங்கரனைச் சிந்தித்தல், ஜலத்தினாலோ அல்லது திருநீற்றினாலோ ஸ்நானமும் மந்திரஸ்நானமும் செய்தல், பிராணாயாமம் ஸந்தியாவந்தனம் மார்ஜனம் [ஆகியன] செய்தல், பாவங்களைக் களையும் அகமர்ஷணக் கிரியை, ஆதித்தியனுக்கு மும்முறை அர்க்கியம் கொடுத்தல், காயத்திரி மந்திரத்தை ஜபித்தல் ஆகியன உள்ளிட்ட உபஸ்தானக் கிரியையைச் செய்தல், தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கள் ஆகியோருக்குத் தர்ப்பணம் செய்தல், பூஜை அறையின் துவார பாலகர்களை அர்ச்சித்தல், அவ்வறையிலுள்ள விக்கினங்களை நீக்குதல் ஆகிய கிரியைகள் உள்ளிட்ட [சிவபூஜையை] எவனொருவன் செய்கிறானோ அவனுக்கே இரண்டுவகையான சித்திகளும் கிட்டும். **(1)**

உண்மையில் ஈசுவரனுடைய சக்தி ஒன்றே; அது எல்லையற்றது. அது பல வடிவங்கள் உடையது. காலம் என்னும் உபாதியினால் பிராஹ்மீ முதலான உருவங்களைப் பெற்ற அச்சக்தியை ஸந்தியையாக அந்தணர்கள் ஒவ்வொருநாளும் தியானிக்கின்றனர். அதில் மலங்களற்ற சுத்த ஆன்மாவும் சிவபெருமானும் சேரும் சைவசந்தியே எல்லாவற்றிற்கும் மேலான ஸந்தியை. ஆதலின் நிர்மலனான சிவபெருமான் ஒருவரே உயர்ந்த சாதகர்களால் எப்போதும் தியானிக்கத்தக்கவர். **(2)**

என் இதயகமலவெளியில் உறைபவரும், சந்திரன், சூரியன் இவர்களுடையதான சஞ்சாரமென வழங்கப்படும் மேல் நோக்கிய பிராணசஞ்சாரமோ கீழ்நோக்கிய பிராணசஞ்சாரமோ அல்லாமல் எப்போதும் சித்ரூபமாக விளங்குபவரும், மோட்சத்தை அடையும் பொருட்டு முனிவர்களால் இடைவிடாமல் தியானிக்கப்படுபவரும், இந்தப் பரந்த உலகமாக விளங்குபவரும், சத்து அசத்து ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டவரும், எல்லையற்று விளங்கு பவருமான ஈசுவரனைக் காலையில் நினைக்கிறேன். **(3)**

நூறாயிரம் சந்திரனுக்கிணையான ஒளிபொருந்தியவரும், எல்லா உலகங்களுக்கும் தலைவரும், அவ்வுலகங்கள் தோன்றுவதற்கு மூலகாரணமாயிருப்பவரும், அளவிட முடியாதவரும், எப்போதும் சக்தியுடன் கூடியவரும், மாயைக்கும் மஹாமாயைக்கும் அப்பாற்பட்டு விளங்குபவரும், நெற்றி நடுவில் பிரகாசிப்பவருமான சம்புவை நடுப்பகலில் இடையறாது நினைக்கிறேன். **(4)**

பிரணவமந்திரமாக விளங்குபவரும், அமிர்தக்கடல் போல் இருப்பவரும், இப்பரந்த உலகத்திற்குத் தலைவராயிருப்பவரும், சிவமந்திரமெனப்படும் பிராஸாதமந்திரத்தின் ஒலியில் விளங்குபவரும், ஞானமாகவும் ஆனந்தமாகவும் இருப்பவரும், கன்மேந்திரியங்கள், ஞானேந்திரியங்கள் ஆகிய கரணங்களும், மாயை மஹாமாயை ஆகிய காரணங்களும், தன்மாத்திரை, ஐம்பூதங்கள் ஆகிய காரியங்களும் இல்லாதவரும், பிரஹ்மரந்த்ரமெனப்படும் உச்சந்தலையில் எப்போதும் விளங்குபவருமான [சிவபெருமானை] ஸாயங்காலத்தில் இடையறாது நினைக்கிறேன். **(5)**

ஒளிகளுக்கெல்லாம் இருப்பிடமானவரும், அசைவற்றவரும், அழிவற்று எப்போதும் விளங்குபவரும், உலகவிஷயங்களினின்றும் மனதை நீக்கி எப்போதும் உள்பொருளான [சிவபெருமானிடத்திலேயே] மனதைச் செலுத்துபவர்களால் மட்டுமே அறியப்படுபவரும், குறைவற்றவரும், [கலைகளற்று விளங்குவதால்] மனதால் நினக்கப்பட முடியாதவரும், அதனாலேயே தியானிக்கப்படவும் முடியாதவரும், உன்மனா நிலைக்கும் அப்பாற்பட்டவருமான சிவபெருமானை இடைவிடாது நினைக்கிறேன். **(6)**

பிருதிவீ தத்துவம் முதல் மாயா தத்துவமீறாக அமைந்த தத்துவங் களின் வரிசையில் அதனதன் உபாதானகாரணம் மற்றும் காரியம் ஆகியவற்றைக் கடந்து சுத்தவித்தியா தத்துவத்தின் முடிவில் வியாபித்து விளங்கும் ஸதாசிவ நிலையை ஆன்மா அடைந்ததாக நன்கு மனத்தால் பாவித்து, மிக உயர்ந்த பலனைக் கொடுக்க வல்லதும் சிவஞானமான கர்மிகம் முதலான ஸம்ஹிதைகளில் மிகவும் போற்றி விளக்கப்படும் தீக்ஷையை மேற்கொண்டு நித்திய கருமங்களை வழுவாது இயற்றிவரும் ஜீவன் தன்னுடைய ஆன்மா சூரியன், சந்திரன், அக்னி, ஆகாயம், சக்தி ஆகியவற்றின் நடுவில் இலங்குவதாகச் செய்யவேண்டும் (பாவிக்கவேண்டும்). **(7)**

பசுஞானம் நீங்கிச் சிவஞானம் பெற்ற ஜீவன் தினமும் பிராணா யாமத்தின் மூலம் ஐம்பூதங்களாலான உடலின் மலத்தை நீக்கி, தத்துவம், புவனம், வர்ணம், பதம் மந்திரமென்னும் ஐந்து அத்துவாக்களை வியாபித்து நிற்கும் நிவிர்த்தி, பிரதிஷ்டா, வித்தியா, சாந்தி, சாந்தியதீதா என்னும் ஐந்து கலைகளினால் தன்னுடைய உடலைச் சுத்தி செய்து, ஐந்து பிரம்மம் ஆறு அங்கம் ஆகிய மந்திரங்களை முறையே அவ்வவ்விடங்களில் நியாஸம் செய்வதன் மூலம் தன்னை அலங்கரித்து நடுஇரவு, பகல், மற்றும் ஸந்தியா வேளைகளில் சிவபெருமானை வழிபாடு, ஹோமம் (அக்கினி காரியம்) ஆழ்ந்த தியானம் (சமாதி) ஆகியவற்றின் மூலம் மகிழ்வித்து முடிவில் சிவபதத்தை அடைகிறான். **(8)**

தேவர்களுள் சிறந்த எந்தச் சிவபெருமான் பெரியவற்றை விடப் பெரியவனோ, அணுவைவிடவும் சிறியவனோ அவன், பிறப்பதும் இறப்பதுமான ஸம்ஸாரத்தைக் கண்டு அஞ்சுபவர்களால் எவ்விடத்தும் பரவி இருப்பவனாகவும், அவரவர்களுடைய உடலில் [அந்தர்யாமியாய்] விளங்குபவனாகத் தியானிக்கப்படவேண்டும்; சிவலிங்கத்தில் பூஜிக்கப்பட வேண்டும். **(9)**

மனதாலேயே உருவாக்கப்பட்ட இதயகமலமென்னும் சிவாலயத்தில் தாமரையிதழ்களாகிய கிரியாசக்திபீடத்தில் ஞானவடிவானதும் நாதஸ்வரூபத்தையுடையதுமான சிவலிங்கத்தைச் சுத்த மனத்தினால் தாபித்து, அதை அமிர்தமாகிற சுத்தநீரினால் நன்கு நீராட்டி, பின்பு வைராக்கியமென்னும் சந்தனத்தினால் அலங்கரித்து, அஹிம்சை முதலிய எட்டு புஷ்பங்களால் அர்ச்சித்து, பிராணாயாமமென்னும் தூபமிட்டு, பிரகாசம் பொருந்திய புத்தியையே தீபமாகக் காட்டி, வெளிவிஷயங்களில் செல்லாதவாறு அடக்கி ஒருமுகப்படுத்திய மனதையே ஹவிஸாக [நிவேதனம்] செய்து, ஸீஷீம்நா நாடியில் பிராணனைச் செலுத்துவதாகிற ஜபத்தைச் செய்து, அந்த மனத்தில் பலவிதமான தியானங்களால் ஏற்படும் ஸதாசிவன் முதலிய வடிவங்களா கிற விலைமதிப்பற்ற ஆபரணங்களைச் சமர்ப்பித்து, [முடிவில்] அந்தச் சிவபெருமானுடன் சமமான நிலையை அடைந்த தன்னுடைய ஆன்மாவையே [ஈசனுக்கு] அர்ப்பணித்தல் ஆகிய முறைகளில் எவன் வழிபடுகிறானோ அவனே எல்லா நலன்களும் வாய்க்கப் பெற்றவன்; அவனே மலங்கள் அற்றவன். **(10-11)**

செயலாற்றத்தக்க நிலையிலுள்ள சக்தியினின்றும் பெருகும் அமிர்ததாரையாகிய நெய்யினால் நாபிகுண்டத்திலமைந்துள்ள அக்கினியைத் திருப்தி செய்து, ஈசுவரசொரூபமானதும் சிவபதத்திலமைந்த பரநாதத்திலுள்ளதும் எங்கும் வியாபித்திருப்பதுமான சைவஜோதியில் நாபிக்குக் கீழுள்ள தாமரையில் தோன்றிய சிவமந்திரமாகிய பிரணவமந்திரத்தை உச்சரித்து அதன் மாத்தி ரைகளின் மூலம் தன்னுடைய ஆன்மாவை எவன் அர்ப்பணிக்கிறானோ அவனே முத்தியடைந்தவன்; [அவனே] அழிவற்றவன். **(12)**

சைவஸித்தாந்தசாத்திரத்தில் கூறியுள்ளவாறு ஆன்மா, பூஜை செய்யுமிடம், [பூஜைத்] திரவியம், மந்திரம் மற்றும் இலிங்கம் ஆகியவற்றைச் சுத்தி செய்து சாதகர்களால் இயற்றப்படும் உன்னுடைய [சிவபெருமானுடைய] வழிபாடு [எப்போதும்] முறை பிறழாமல் இருக்கக் கடவது. **(13)**

ஆதாரசக்தி, அநந்தமென்னும் தாமரை, தர்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அநைசுவரியம் ஆகிய எண்குணங்கள், [ஆசனத்தின்] மேல்விரிப்பு, கீழ்விரிப்பு, நன்கு அலர்ந்த தாமரை வாமை, ஜ்யேஷ்டை, முதலிய ஒன்பது சக்திகள் ஆகியன அடங்கிய சிவாஸனத்தை நான் வணங்குகிறேன். **(14)**

பிருதிவியாகிய கிழங்கினின்றும் தோன்றியதும், ஜலதத்துவம் முதல் காலதத்துவமீறான இருபத்தொன்பது தத்துவங்களைத் தண்டாக உடையதும், அதற்கும் மேல் அமரேசம் முதல் சிகேதமீறான எழுபத்திரண்டு உலகங்களை உடையதும், ஐம்பது மனநிலைகளையே (பாவங்களையே) தாமரைத் தண்டின் நடுவிலுள்ள நூலிழைகளாகக் கொண்டதும், மாயையையே தண்டும் இதழ்களும் சேருமிடமாகக் கொண்டதும், சுத்தவித்தியையாகிய தாமரையை உடையதும், சூரியன் சந்திரன் அக்கினி ஆகிய மும்மண்டலங்களைக் கொண்டதும், வாமை முதலிய ஒன்பது சக்திகளைத் தன் கேசரங்களிலும் இதழ்களின் நுனியிலும் கொண்டதுமான மிகச் சிறந்த யோகபீடத்தின் மேல் இதய மந்திரத்தை முன்னும் பின்னும் கொண்ட ஆன்மமந்திரத்தையே வடிவாகக் கொண்டவரும் பிந்துசக்தியில் வியாபித்திருப்பவருமான ஈசுவரனை வணங்குகிறேன். **(15-16)**

அந்தக் கிழங்கானது நூறுகோடியோஜனை விரிந்து பரந்தது; அதிலிருந்து தோன்றிய தண்டானது பரார்த்தம் (பத்தாயிரம் யோஜனை) அளவுடையது; தண்டும் இதழ்களும் சேருமிடம் கோடிபரார்த்தம் என்னும் யோஜனை அளவைக் கொண்டது. இலட்சம் கோடி யோஜனை பரந்து விரிந்தது அந்தத்தாமரை. அதில் வீற்றிருக்கும் சிவபெருமானின் உடலாகத் திகழும் ஸதாசிவவடிவமானது கோடி ஈசுவரர்களுக்கொப்பானது; கோடி கோடி (அர்புதம் அர்புதம்) யோஜனை பரந்து விரிந்தது. அது மந்திரமயமான உடலைக்கொண்டது. **(17)**

எந்த பிந்து தத்துவத்தில் மேதா, பிந்து, நாதம் என்னும் மூன்றுவித நாதத்தினாலானதும், எல்லாவற்றிற்கும் மேலானதும், ஞானம் கிரயை என்னும் இரண்டு பாதங்களுடையதும், மங்களகரமானதும், எல்லாச் செல்வங்களையும் சுகங்களையும் அளிக்கவல்லதும், உவமையற்றதும், மலங்கள் நீங்கிச் சுத்தமானதும், பிந்துமயமானதும், சிவமந்திரசாத்திரவல்லுனர்களால் எப்போதும் தியானிக்கப்படுவதும், நாதவடிவமானதும் அளவிடற்கரிய மஹிமை பொருந்தியதுமான அந்த ஸதாசிவவடிவம் தியானிக்கப்படுகிறதோ அதற்கு என் வணக்கங்கள். **(18)**

ஆகாசபீஜமென்னும் ஹகாரமந்திரத்தின் நடுவில் எப்போதும் வீற்றிருப்பதும், [சாத்திரங்களில் கூறப்பட்ட] ஆசாரங்களை வழுவாது கடைப்பிடித்து ஒழுகும் யோகிகளின் இதயகமலத்தில் விளங்குவதும், ஈசுவரதத்துவத்திற்கும் மேல் நிஷ்களசிவதத்துவம் வரை வியாபித்திருப்பதும், ஸதாசிவவடிவமானதும், கலை, புவனம் மற்றும் அவற்றின் நாயகர்கள் ஆகியவற்றை உள்ளடக்கியதுமான அந்த பிந்துவானது தியானிக்கப்படவேண்டும். **(19)**

ஈசானத்தைத் தலையாகவும், தத்புருஷத்தை அழகிய முகத்தாமரையாகவும், அகோரமூர்த்தியை இதயமாகவும், வாமதேவரை மறைவிடமாகவும், ஸத்யோஜாதரைத் தன் வடிவாகவும் கொண்ட வரும், [வர்ணம், பதம், மந்திரம், தத்துவம், புவனம், கலா என்னும்] ஆறு அத்துவாக்களே வடிவானவரும், ஐந்து, நான்கு, பதிமூன்று, எட்டு, எட்டு என [முறையே ஈசானம் முதலிய ஐந்து முகங்களுக்கும்] முப்பத்தெட்டு கலைகளையே தன் உடலாகக் கொண்ட வரும், கிரியை, இச்சை, ஞானம் என்னும் மூன்று சக்திகளை ஒவ்வொரு முகத்திற்குமாகக் கண்களாகக் கொண்டு பதினைந்து கண்களையுடையவரும், மந்திரவடிவமே ஆனவரும் பிரஹ்மரந்திரத்தில் விளங்குபவருமான அந்தத் தேவரை நான் வணங்குகிறேன். **(20)**

வெண்மை, சிவப்பு, கருப்பு, மஞ்சள், படிகம் ஆகிய ஐந்து வர்ணங்களை முறையே கொண்ட ஸத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்னும் முகங்களையும், வெண்மை, மஞ்சள், சிவப்பு, கருப்பு, சிவப்பு ஆகிய வண்ணங்களையுடைய இதயம், சிரஸ் முதலிய ஆறு அங்கங்களையும் கொண்டவரும், வியக்தமான உருவத்தையுடையவரும், ஸம்ஸாரத் துன்பத்தை நீக்கி என்றுமழியாத மங்களமான சிவபதத்தைக் கொடுப்பதால் [எந்த வர்ணமும் இல்லாமல்] படிகம் போன்று ஒளிவீசுபவரும், சித்து அசித்து ஆகியவற்றைக் கொண்ட இந்த உலகத்தின் நாயகராகவும், எல்லாப் பொருள்களும் தோன்றுவதற்குக் காரணமாகவும் திகழும் அந்த [ஈசுவரனை] மந்திரம் மற்றும் அவற்றின் பொருள் என இவ்விரண்டின் ஐக்கியமாகத் திகழ்பவராக எல்லாச் சைவசமயங்களும் போற்றுகின்றன. [அப்படிப்பட்ட] அந்த ஈசுவரனுடைய ஐந்து முகங்களும் பல வண்ணங்களைக் கொண்டதால் மிக விந்தையான தோற்றம் கொண்டு விளங்குகின்றன. **(21)**

எல்லாவற்றிற்கும் தலைவரான [சிவபெருமானின்] ஆகாயவடிவமானதும், வெண்மையானதுமான ஈசானமுகத்தினால் தத்புருஷம், அகோரம், வாமதேவம், ஸத்யோஜாதம் என்னும் மற்ற நான்கு முகங்களும் வியாபிக்கப்பட்டுள்ளன; ஆகவே, ஒளிபொருந்திய வெண்மையான [ஈசானமுகம்] கிழக்கு முதலிய நான்கு திக்குகளுக்குத் தலைவர்களான இந்திரன் முதலானோர்க்கு அவரவர்களுடைய வண்ணங்களான மஞ்சள் முதலியவற்றை முறையே அருளுவதால் [சிவபெருமானுடைய] ஒவ்வொரு முகமும் ஐந்து வர்ணங்களைக் கொண்டது எனச் சிவாகமங்களைக் கற்றுணர்ந்தவர்கள் அறிகிறார்கள். **(22)**

இளமை, யௌவனம், முதுமை, பெண், ஆண் என்னும் நிலைகளைக் கொண்ட ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமம், ஸத்யோஜாதம் என்னும் ஐந்து முகங்களையுடைய சிவபெருமானை வணங்குகிறேன். **(23)**

திரிசூலம், கட்வாங்கம், சக்தியாயுதம், நீலோத்பலம், நாகம், டமரு, மாதுளங்கனி, அக்ஷமாலை ஆகியவற்றைத் தன்னுடைய [எட்டுக்] கரங்களில் முறையே தரித்தவர்; அபயம் வரதம் என்னும் முத்திரைகளையுடைய இரு கைகளையும் கொண்டவர் [ஸதாசிவன்]. **(24)**

எங்கும் வியாபித்து விளங்கும் ஈசுவரனுடைய சக்தியானது ஞான ஆனந்தமயமானது; ஸம்ஸாரமென்னும் கொடிய பயத்தைப் போக்குவதால் அபயம் எனப்படுகிறது. இச்சை, ஞானம், கிரயை என்னும் மூன்று சக்திகளே திரிசூலமாகும். அச்சக்தியே நாதம், பிந்து, எனப் பரிணாமமடையும் பிந்து; அது கட்வாங்கம் என்னும் ஆயுதத்தால் குறிக்கப்படுகிறது. மாயையின் பரிணாமங்களான புவனம் போகம் ஆகியவற்றை நுகரும் ஆன்மாவிற்கு அதன் கருமத்திற்கேற்ப போகங்களை அளிக்கும் சக்தியே வரதம் எனப்படுகிறது. அவ்வான்மாக்களுக்கு உடல் முதலிய இந்திரியங்களைத் தோற்றுவிக்கும் மாயையே மாதுளங்கனி. கலை முதலிய தத்துவங்களாகப் பரிணமிக்கும் மாயையே டமரு. அந்தக்கலை முதலிய தத்துவங்களே நாகம். பத்து இந்திரியங்கள், அவற்றின் காரணங்களான ஐம்பூதங்களை இயக்கும் சக்தியே அக்ஷமாலை. சுருங்குதல் விரிதல் போல் விளங்கும் பிரவிர்த்தி நிவிர்த்தி என்னும் செயல்களைக் குறிப்பதே நீலோத்பல மலர். இவ்வாறாகச் சம்புவினுடைய பரநிலையிலுள்ள ஆயுதங்கள் ஆகமவல்லுநர்களால் அறியப்படுகின்றன. **(25)**

எல்லா வித்தியைக்கும் தலைவரும் (அவற்றின் பிறப்பிடமாகத் திகழ் பவரும்), எல்லா ஜீவராசிகளுக்கும் ஒரே நாயகரும், பீஜம், பதம் எனப் பல்வகைப்பட்ட மந்திரங்களுக்கும் தலைவராக விளங்குபவரும், எங்கும் வியாபித்திருக்கும் பிரஹ்மமாக இருப்பதால் நிஷ்களமாகத் திகழ்பவருமான [ஈசான வடிவினரான] ஸதாசிவனை நான் வணங்குகிறேன். **(26)**

பக்தர்களுக்குச் சைவஞானத்தை அளிப்பவரும், [தன்னுடைய மஹிமையால்] தேவர்களுள் உயர்ந்தவரும், ருத்திரவடிவமுடை யவரும், எல்லாத் தத்துவங்களையும் இயக்குபவருமான தத்புருஷ வடிவத்தைச் சிவத்துவப்பேறு பெரும்பொருட்டு வணங்குகிறேன். **(27)**

கோரவடிவினரும், [அதற்கு எதிர்மறையான] மிக மங்கலமான வடிவமும் பொருந்தியவரும், பசுக்களின் பாசபந்தத்தைத் தகர்த்து அழிப்பவரும், மிகக் கொடுமையான பாசங்களுக்கெல்லாம் கொடுமையாயிருந்து [அழிப்பவரும்], அளவிடற்கரிய உருவங்களைக் கொண்டவருமான [அகோர வடிவத்தை] மற்றெல்லாவற்றினின்றும் நீங்கிச் சரணடைகின்றேன். **(28)**

வாமதேவமூர்த்தியின் வடிவங்களான ஜ்யேஷ்டர், ரௌத்திரர், கலவிகரணர், பலவிகரணர், காந்தர், பலப்பிரமதனர், ஸர்வபூததம னர், மனோன்மனர் ஆகியவர்களை நான் வணங்குகிறேன். **(29)**

எல்லாவற்றையும் அறிந்தவரும், வணங்கி வழிபடுவோர்க்கு ஸம்ஸாரமென்னும் பயத்தைப் போக்குபவரும், பவமென்னும் ஸம்ஸாரநிலையைக் கடந்ததான மோட்சத்தை அளிப்பவரும், மலங்களற்றவரும், மாயை மஹாமாயை ஆகியவற்றை அதிட்டித்து இருப்பவருமான ஸத்யோஜாதமூர்த்தியை நான் வணங்குகிறேன். **(30)**

மூலாதாரத்தில் தோன்றும் பிராஸாதமந்திரத்தின் எழுத்துக் களையும் அவற்றின் ஒலிகளையும் ஒவ்வொன்றாகக் கடப்பதன் மூலம் பிரஹ்மா முதல் ஸதாசிவன் ஈறான எல்லாத் தானங் களையும் கடந்து முடிவில் பரவியோமமென்னும் துவாதசாந்தத்தில் எப்போதும் விளங்குபவரும், அறிவாகவும் ஆனந்தமாகவும் இருப்பவரும், குறைவற்று எங்கும் வியாபித்திருப்பவரும், என்றுமுள்ளவரும், இந்தப்பரந்த உலகமாகத் திகழ்பவரும், [மலங்களற்றுச்] சுத்தமானவரும், ஒளிமயமானவரும், அளவற்ற மஹிமைபொருந்தியவருமான [அந்தப்] பரவடிவானவர்க்கு என்னுடைய வணக்கங்கள். **(31)**

ஒன்று, இரண்டு, மூன்று மாத்திரைகள், அர்த்தமாத்திரை, கால் மாத்திரை, எட்டில் ஒருபங்கு, பதினாறில் ஒருபங்கு, முப்பத் திரண்டிலொருபங்கு, அறுபத்துநான்கில் ஒருபங்கு, நூற்றிருபத் தெட்டில் ஒருபங்கு என மாத்திரைகளைக் கொண்டு முடிவில் இருநூற்றைம்பத்தாறில் ஒருபங்கு என மாத்திரை அளவைக் கொண்ட ஸமனையை ஆஸனமாக உடைய நிஷ்களபரமசிவனை நான் வணங்குகிறேன். **(32)**

அகாரம், உகாரம், மகாரம், பிந்து, அர்த்தசந்திரன், நிரோதி, சக்தி, மூன்று ரேகை வடிவான வியாபினி எனக் கடந்து முடிவில் உன்மனாவில் விளங்கும் ஸகலன், ஸகலாகலன், ஸகலாபரன் என மூவகையாகத் திகழும் சிவபெருமான் [நம் எல்லோரையும்] காக்கட்டும். **(33)**

அகாரம், உகாரம், மகாரம், பிந்து, அர்த்தசந்திரன், நிரோதி, நாதம், சக்தி, வியாபினி, ஸமனா, உன்மனா எனப்படும் கலைகளுடனும், அவ்வவற்றின் அதிபர்களாகத் திகழும் பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன் முதலியவர்களுடனும் சேர்ந்ததும், உடலில் வஸ்தி முதல் பிரஹ்மரந்திரம் வரையிலான அறுபது அங்குலத்தில் பரந்து காணப்படுவதும், அறுவகைப்பட்ட சூனியங்களில் சஞ்சரிப்பதும், ஆறு அத்துவாக்களிலும் வியாபித்திருப்பதும், எல்லா மந்திரங்களுக்கும் தலையாயதும், கலைகளற்று விளங்குவதும், நன்மையையே அளிப்பதுமான பிராஸாதமந்திரத்தை நான் வணங்குகிறேன். **(34)**

ஹே மஹேசுவரனே! ஆவாஹனம், ஸ்தாபனம், ஸந்நிதாபனம், ஸந்நிரோதனம் முதலிய முத்திரைகளாலும், ஹ்ருதயம் முதலிய அங்கமந்திரங்களாலும் தன்னுடைய மனதில் சிவபெருமானை முழுவதும் நன்கு பாவித்துப் [பெருமானுடன்] ஐக்கியத்தை உணர்வதன் மூலமும், பாத்யம், அர்க்கியம், ஆசமனம் முதலிய உபசாரங்களாலும் உன்னை வழிபடுவது [ஒன்றே] இந்தப் பிறவியின் பயன். **(35)**

ஆவாஹனம் என்பது [வழிபடுவோனின்] ஆன்மாவில் சித்தாகிய [சிவபெருமானைப்] பிரகாசிக்கச் செய்வதே; அங்கு ஈசுவரனைத் தாபித்து இருக்கச் செய்வதே ஸ்தாபனம்; ஆன்மாவை ஈசுவர னிடத்தில் நிலைபெற்று இருக்கச் செய்வதே ஸந்நிதானம்; தன்னுடைய ஆன்மாவைச் சிவபெருமானிடத்தில் இலயித்து அடங்கி இருக்கச் செய்வதே நிரோதம். **(36)**

ஞானமே இதயமாக [சித்சக்தியாகக்] கொண்டவரும், எந்தக் குணங்கள் பொருந்தியுள்ளதால் ஈசுவரனென்றழைக்கப்படுகின் றாரோ அந்தக் குணங்களையே தனக்கு உருவமாகக் கொண்ட வரும், தன்னைத் தவிர வேறெவர்க்கும் வசப்படாத சக்தியையே சிகையாகக் கொண்டவரும், தன்னுடைய பிரகாசமான ஒளி யையே கவசமாகக் கொண்டவரும், இவ்வுலகங்களெல்லாம் தோன்றுவதற்குக் காரணமானவருமாகிய சிவபெருமானுக்கு என்னுடைய வணக்கங்கள். **(37)**

பசுக்களின் மலங்களை அழிக்கவல்லதும் எவராலும் பொறுக்க முடியாததுமான சக்திவாய்ந்ததுமான [பாசுபத] அஸ்திரத்தையுடைய வரும், மாற்றங்களற்றவரும், ஹ்ருதயம், சிரஸ், சிகா, கவசம் நேத்திரம், அஸ்திரமென்னும் ஆறு அங்கங்களைக் கொண்ட ஸதாசிவ வடிவினரும், அழிவற்றதாகிய அமிர்த வடிவானவருமாகிய சூலத்தையுடையவருக்கு என் வணக்கங்கள். **(38)**

ஸ்வபாவமாகவே மலங்களற்றுச் சுத்தமான சிவபெருமானுக்குப் பாத்தியம், ஆசமனம் முதலியன சமர்ப்பிப்பது பூஜை செய்பவனின் ஆன்மாவை மலங்களினின்றும் நீக்குவதற்கான உபாயமே; அர்க்கியம், பூ முதலியவற்றை அர்ப்பணித்தல் ஸதாசிவனுடைய நிலையை அடைவதற்கான உபாயமே. **(39)**

[பூஜையின் அங்கமாக ஈசுவரனுக்கு] ஸ்நானம் செய்வித்தல் ஆன்மாவினுடைய மலங்களைப் போக்குவல்லது; மணம் பொருந்திய மிக உயர்ந்த சந்தனத்தைச் [சிவபெருமானுக்குப்] பூசுதல், நல்ல அழகிய வஸ்திரம் மற்றும் ஆபரணங்களாலும் மணம் வீசும் அழகிய மலர்மாலைகளாலும் அலங்கரித்தல், மலரிட்டு வழி படுதல், இவ்வாறு அலங்கரிக்கப்பட்ட ஸதாசிவமூர்த்திக்கு முறைப்படி தூபமிடுதல் ஆகியன சுத்தவித்தியாபுவனத்தில் ஆன்மாவானது அடையும் போகங்களைக் குறிக்கும். அவ்வாறே [ஸதாசிவ மூர்த்திக்கு] தீபம் இடுதல் மலங்களற்றுச் சுத்தமான ஞானத்தைக் கொடுக்கவல்லது. **(40)**

அக்கினி, ஈசானன், நிர்ருதி, வாயு, இந்திரன், யமன், வருணன், ஸோமன் (ஸௌமியம்) ஆகிய எட்டுத் திக்கிலும் முறையே இருப்பவர்களும், நீர், பூமி, சூரியன், வாயு, அக்கினி இவற்றின் வண்ணங்களான வெண்மை, மஞ்சள், சிவப்பு, கருமை, நெருப்பின் நிறம் ஆகியவற்றையொத்த நிறமுடையவர்களும், பன்னிருகண்களும் நான்கு முகங்களையும் உடையவர்களும், வரதம், அபயம் ஆகிய முத்திரைகளையும் திரிசூலம் சக்தி என்னும் ஆயுதங்களையும் தாங்கிய நான்கு கரங்களையும் கொண்டவர்களும், சிவபெருமானின் அங்கங்களான ஹ்ருதயம் முதலியவற்றினின்றும் தோன்றியவர்களும், ஹ்ருதயம், சிரஸ் முதலிய ஆறு அங்கமந்திரங்களின் வடிவானவர்களுக்கு என் வணக்கங்கள். **(41)**

ஐந்து பிரஹ்மமந்திரங்கள் ஆறு அங்கமந்திரங்கள் ஆகியவற்றைக் கொண்டு தியானிக்கப்பட்ட ஸதாசிவவடிவமான போகாங் கத்தை அர்ச்சிப்பது சிவகுணங்களை அடையும் பொருட்டே; சிவபெருமானுடைய அங்கங்களுடன் ஐக்கியத்தைப் பாவித்தல் பூஜை செய்பவரின் ஆன்மா சிவபெருமானுடன் ஐக்கியத்தை உணரும் பொருட்டே. அன்னம் முதலியவற்றை நிவேதனம் செய்தல், சுத்தமான நீர், திருவாய்க்கு நறுமணமூட்டும் முகவாஸம் முதலியவற்றை என்றும் திருப்தரான [சிவபெருமானுக்கு] அர்ப்பணித்தல் ஆகியன [வழிபடுவோரின்] மன நிறைவுக்காகவே. [இவ்வாறாக] உன்னுடைய அர்ச்சனையின் பயனானது சிவ பாவத்தை அடைவதாகிய மங்களத்தைக் கொடுக்கவல்லது என்பது மிக ஆச்சரியமானது. **(42)**

எந்தவித மலமுமற்றுப் பவித்திரமான சிவபெருமானுக்குப் பவித்திரம் [என்னும் மந்திரிக்கப்பட்ட] நூல்களைச் சமர்ப்பித்தல் [ஆன்மாவானது] ஆத்தியாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்னும் மூன்றுவகையான துன்பங்களினின்றும் நீங்கி எல்லா நலன்களையும் அடையும் பொருட்டே; [சிவமந்திரத்தை] ஜபம் செய்தல் அதன் பயனைப் பக்தியுடன் பெருமானுக்குச் சமர்ப்பித்தல் ஆகியன பிரஹ்மா, விஷ்ணு, இந்திரன் முதலியோரின் நிலைகளை அடைவதற்கான உபாயம். **(43)**

வழிபாடு செய்யும் பொழுது எல்லாக் கலைகளுடனும் கூடியவரா கவும், [மந்திரத்தை] ஜபம் செய்யும் பொழுது சக்தி மேலீட்டால் ஸகலாகலராகவும், பூஜையின் முடிவில் ஆத்மஸமர்ப்பணம் செய்யும் போது பரிபூர்ணராகவும் துவாதசாந்தத்தில் நிஷ்கள ராகவும் ஸ்படிகநிறமுடையவராகவும், தன்னுடைய உடலில் கலைகளெல்லாம் பொருந்தியவராகவும் விளங்கும் பரமசிவனை எவன் அறிகிறானோ அவன் சிவனே என்பதில் யாதொரு ஐயமுமில்லை. **(44)**

பூஜையின் முடிவில் மீண்டும் [அஷ்டபுஷ்பத்தினால்] அர்ச்சிப்பது ஈசுவரனை அங்கு எழுந்தருளும்படி செய்வது; ஈசுவரனிடம் நன்கு பிரார்த்தனை செய்வது அவரை நேரில் காண்பதற்கான உபாயம்; அக்கினியில் ஹோமம் செய்வது [ஆன்மா] ஸதாசிவபுவனத்தில் போகங்களைப் பெறுவதற்கே; பூஜையின் பயனைச் சமர்ப்பித்தல் மும்மலங்களைப் போக்குவதற்கான உபாயம்; [முடிவில்] தன்னுடைய ஆன்மாவையே [ஈசுவரனுக்கு] அர்ப்பணம் செய்வது பரசிவனிடத்திலேயே லயித்திருப்பதற்கான உபாயம். **(45)**

நமக்கு அருளுவதற்காக எழுந்தருளிய ஈசுவரனைப் பூஜையின் முடிவில் அவருடைய இஷ்டம்போல் செல்லுமாறு கோரும் பராங்முகார்க்கியம் எனும் அர்க்கியத்தை அளித்தலானது ஈசுவரனுக்கு ஆசனமாக அமைந்தவையும், அசுத்தமானவையுமான பிருதிவீ முதல் சிவதத்துவமீறான முப்பத்தாறு தத்துவங்களையும் அவ்வவற்றின் காரியங்களைச் செய்யுமாறு வேண்டுவதற்கே; பின்பு சிவபெருமானை அவருடைய இருப்பிடத்திற்குச் செல்லுமாறு பிரார்த்தித்தல் அவரிடத்திலேயே நீங்காதிருப்பதற்கான உபாயம். இவ்வாறாக [எவன்] பூஜை செய்கிறானோ அவன் சிவபதத்தை அடைவது திண்ணம். **(46)**

அந்தணர்களுள் சிறந்தவரும், சோழநாட்டைச் சேர்ந்தவரும், கல்வியறிவு மிக்கவரும் சைவசித்தாந்தசாத்திரங்களைக் கற்ற றிந்தவருமான ஞானசம்பு [என்பவர்] சிவபெருமானின் பூஜா ஸ்தோத்திரமென்னும் [இந்நூலை] இவ்வுலக இன்பங்களையும் மோட்சத்தையும் பெறுவதற்காக அழகிய மங்கலம் பொருந்திய சொற்களால் இயற்றியுள்ளார். **(47)**